ஆதிசங்கரர் அருளிச்செய்த

# கனகதாரா ஸ்தோத்ரம்



தமிழ்க்கவியாக்கம் :

**குற்றாலம் வள்ளிநாயகம்**

**(கவிஞர் மதுபாலிகா)**

**கனகதாரா ஸ்தோத்திரம் (தமிழாக்கம்)**

முதற்பதிப்பு - அக்டோபர் 2013

ஆசிரியர் & வெளியிடுபவர் :
**குற்றாலம் வள்ளிநாயகம் ©**
ஜி-1, ஸ்ரீ லஷ்மி பிளாட்ஸ்
8, லோகோ ஸ்கீம் முதல் தெரு..
ஜவஹர் நகர்,
சென்னை - 600 082.

கிளாஸிக் பிரின்ட்ஸ்
23/11, பாரதி சாலை
பெரம்பூர், சென்னை-11

முன்னுரை

## தர்மம் தலைகாக்கும்

தானம் செய்கின்றவர்கள் தலைமுறையை தர்மம் காக்கும். தானம் என்பது தர்மத்தில் ஓர் அங்கம்தான். ஆனால் அதற்கு தர்மத்திற்கு இணையான சிறப்பு இருக்கிறது. 'தானம் என்றாலே தர்மம்' என்றும் 'தர்மம் என்றால் அது தானம் தான்' என்று நினைக்கும் அளவிற்கு அதன் அந்தஸ்து உயர்ந்துள்ளது. சன்யாசிகளை காப்பது இந்த சமூகத்தின் கடமை. அதனையே வள்ளுவரும் இல்லறத்தார்க்கு தலையாய தர்மம் என்று வலியுறுத்துகிறார்.

**துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்**

**இல்வாழ்வான் என்பான் துணை – குறள்**

விருந்தோம்பும் வீட்டில் லஷ்மி நிரந்தரமாக வாசம் செய்வாள் என்பது வேதவாக்கு.

தன் விரதபூர்த்திக்கும் பசிக்கும் வைத்திருந்த ஒரே நெல்லிக்கனியை பாலசன்யாசியான சங்கரருக்கு, தானம் அளித்த ஏழையின் வீட்டு முற்றத்தில் பொன்மழை பொழியட்டும் என்று ஆதிசங்கரர் மஹாலஷ்மியை கனகதாரா ஸ்தோத்திரங்களால் வேண்டினார். ஏழைக்குடும்பத்தின் வறுமை முன்வினைப்பயனாயினும் அதைத் துடைத்தெறிந்து திருமகள் அளவில்லா செல்வம் அளித்த பெருமை கனகதாரா ஸ்தோத்திரங்களுக்கு உரித்தானது.

இத்தகைய மகிமை வாய்ந்த ஸ்தோத்திரங்களை அனைவரும் பாராயணம் செய்து சகல வளங்களும் பெற ப்ரார்த்தித்து இந்நூல் பிரசாதமாக வழங்கப்படுகிறது.

ஜெய ஜெய சங்கர! ஹர ஹர சங்கர!

- **குற்றாலம் வள்ளிநாயகம்**

# கனகதாரா ஸ்தோத்திரம்

## காப்பு

தனக்கென்று வைக்காமல் நெல்லியை மனமுவந்து
தானமாய் தந்தவொரு ஏழைக்கு
சுணக்கம் ஏதுமின்றி அருள்செய்ய திருமகளை
சொல்லால் துதித்தான் சங்கரன்
வணக்கமாய் அவன்பாடிய கனகதாரா ஸ்தோத்திரத்தின்
வாக்கினிமை செவிமடுத்த மகாலஷ்மி,

இணக்கமாய் முன்வந்து பொன்மாரிப் பொழிந்தாள்
ஏழையின் வாசலில் மகிழ்ந்து!
கணக்கில்லா வளம் சேர்க்கும் கனகதாரா பாசுரத்தை
கன்னித் தமிழினிலே தருவதற்கு
மனக்கண் முன்தோன்றி வாழ்த்துவான் ஏகதந்தன்
மலராக மணக்கட்டும் செய்யுள்!



**அங்கம் ஹரே: புளக பூஷணமாஸ்ரயந்தீ**
**ப்ருங்காங்கநேவ முகுளாபரணம் தமாலம்**
**அங்கீக்ருதாகில விபூதிரபாங்கலீலா**
**மாங்கல்யதாஸ்து மம மங்களதேவதாயா:** 1

மகரந்தம் உள்ளிருக்கும் மொக்குகளைத் தாங்கி
மணக்கும் 'தமால' மரம்சுற்றும் வண்டாய்
வலம் வந்து ரீங்கரித்து பேரின்பத் தோடு
நிலையாக மால்மார்பில் சொக்கிக் கிறங்கி

அகம்குளிர வீற்றிருக்கும் அம்மையே லஷ்மி
அவன்மீது வைத்தவிழி அன்பால் திருப்பி
மகன்மீதும் நாட்டுவையேல் மாசற்ற செல்வம்
இவன்வசமாம் ஈதலுக் கே!

**முக்தா முஹுர்விதததீ வதனே முராரே:**
**ப்ரேமத்ரபாப்ரணிஹிதானி கதாகதானி**
**மாலாத்ருஸோர்மதுகரீவ மஹோத்பலே யா**
**ஸாமே ஸ்ரியம் திஸது ஸாகரஸம்பவாய:** 2

அன்பால் கடைக்கணிக்கும், ஆர்வத்தை நாணமது
தின்ன நிலம்பார்க்கும், நீலமலர்த் தேன்துளியை
உண்ணச் சிறுவண்டு ஓடிச் சுழல்வதுபோல்
எண்ணித் திருமாலின் இன்மார்புத் தோற்றத்தை

வெண்பாற் கடற்பிறந்த நாயகியாம் தேவியவள்
கண்ணின் திருப்பார்வை காணக் கணநேரம்,
எண்ணு பவையாவும் ஈடேறும், புண்ணியத்தால்
நண்ணுமே செல்வங்கள் தாம்!

**ஆமீலிதாக்ஷமதிகம்ய முதா முகுந்தம்**
**ஆனந்த கந்தம் அநிமேஷம் அனங்கதந்த்ரம்**
**ஆகேகரஸ்தி தகநீதி சுபக்ஷ்ம நேத்ரம்**
**பூத்யை பவேந்மம புஜங்கஸயாங்கனாயா: 3**

அளப்பரிய அன்பால்நீ அரைவிழியை மூடி
உளக்கண்ணால் பார்த்து உருகியதால் தேவன்
களிப்புடனே காதல் நிதியதனைப் பெற்றான்!
இழப்பில்லா செல்வம் எனைவந்து எட்ட

வளப்பமுடன் பார்த்தே வழிவிடுவாய் தாயே
குளிர்விக்கும் கண்ணாலே தான்!

**பாஹ்வந்தரே மதுஜித: ஸ்ரிதகௌஸ்துபே யா**
**ஹாராவலீவ ஹரிநீலமயீ விபாதி**
**காமப்ரதா பகவதோபி கடாக்ஷமாலா**
**கல்யாணமாவஹது மே கமலாலயாயா: 4**

மதுவெனும் மாய அரக்கனை வென்ற
மணிமார் பினிலே அசைந்திடும் நீல
அணிநிகர் கண்ணால் அருட்கொடை யீனும்
அணியே! அகிலம் புரப்பவன் தேவி!

பிணியாய் வறுமை பிடித்தே யுழலும்
அடியார் நிலைக்கு இறங்கிநீ பார்த்தால்
பொடிபடும் ஏழ்மை பொருந்திடும் செல்வம்
தொடுகவே பார்வை யினால்!



**காலாம்புதாளிலலிதோரஸி கைடபாரே:**
**தாராதரே ஸ்புரதி யா தடிதங்கனேவ**
**மாதுஸ்ஸமஸ்தஜகதாம் மஹனீய மூர்த்தி**
**பத்ராணி மே திஸது பார்கவநந்தனாயா 5**

கைடப மர்த்தனன் மாலவன் மார்பெனும்
மைநிற மேக வனத்தினில் மின்னும்
கொடியே, பார்கவ புத்திரி யாம்நீ
சுடர்விடு கின்றதால் தூயவன் மார்பும்

தொழப்படு கின்றது என்றால் மிகையோ?
உழைப்பைக் கொடுத்தபின் உன்னருள் கேட்பேன்
மழையாய் வருவாய், மகிழ்வாய் மலர்வாய்
விரைவாய் தருவாய் தனம்!

**ப்ராப்தம் பதம் ப்ரதமத: கலு யத்ப்ரபாவாத்**
**மாங்கல்ய பாஜி மதுமாதுனி மன்மதேன**
**மய்யாபதேத்திஹ மந்தரம் ஈக்ஷணார்த்தம்**
**மந்தாலஸம் ச மகராலகன்யகாயா: 6**

அசுரர் குலத்தை அடியோ டழித்த
அரங்கன் திருமா லவனையும் வெல்ல
அனங்கன் மதனவன் நின்துணை கொண்டான்
அதனால் அவனே அவனியை வென்றான்!

அழகிய நங்காய், அருட்திருக் கண்ணாய்!
சிறப்புகள் இத்தனை கொண்டவள் நீயும்
சிறிதள வேனும் இவனையும் காண
வரும்சுப மங்களங் கள்!

**விஸ்வாமரேந்த்ரபத விப்ரமதானதக்ஷம்**
**ஆனந்தஹேதுரதிகம் முரவித்விஷோபி**
**ஈஷந்நிஷீதது மயி க்ஷணம் ஈக்ஷணார்த்தம்**
**இந்தீவரோதரஸஹோதரமிந்திராயா:** 7

அவ்வுலகை ஆளவரம், இவ்வுலகை வெல்லபொருள்

எவ்வுலகும் போற்றவருள் எல்லாமும் சேர்ப்பதுடன்

கவ்வுமுரன் வென்றமாலும் களிகூறத் தேனூறும்

செவ்வி அருள்கூறும் சேர்வதால் பேறாகும்!

நீலமல ரன்னவிழி நின்றுஇமைப் போழ்துபட

காலமெல்லாம் சித்திக்கும், கைப்பொருளும் இன்பமதும்

தேடியெந்தன் வீடுவரும், தெம்மாங்கு வாழ்வுதரும்

சூடினேன் உன்திருப்பா தங்கள்!

**இஷ்டா விஸிஷ்ட மதயோபி யயா தயார்த்ர**
**த்ருஷ்ட்யா த்ரிவிஷ்டபபதம் ஸுலபம் லபந்தே**
**த்ருஷ்டி: ப்ரஹ்ருஷ்ட கமலோதரதீப்திரிஷ்டாம்**
**புஷ்டிம் க்ருஷீஷ்ட மம புஷ்கரவிஷ்டராயா:** 8

திருவடியைப் போற்றத் திருவருளே வேண்டும்

கருவினிலே தொற்றி இறுதியிலே முற்றும்

பெரும்பாவம் தன்னை துடைத்திடவே இங்கு

அனைவருக்கு மாமோ? திருத்தேவி யுந்தன்

அருட்பார்வை காணின் பழிபாவந் தீரும்

கருணைக்கண் காட்டுவா யே!



**தத்யாத்தயானுபவனோ த்ரவிணாம்புதாராம்**
**அஸ்மிந்நகிஞ்சன விஹங்கஸிஸௌ விஷண்ணே**
**துஷ்கர்மதர்மமபனீய சிராய தூரம்**
**நாராயணப்ரணயினீ நயனாம்புவாஹ:** 9

நீல மலர்விழிகள் நீருண்ட மேகமாய்

தூவும் மழைக்காற்று தொட்டு விடக்கருணை

மேவும் மிகவாகும் மின்னல் ஒளிபோல

பாயும் நதிபோல பாடல் சுவைபோல

சேரும் செல்வங்கள் திரளும் மலைபோல

தேனின் உவப்பாகு மே!

**கீர்தேவதேதி கருடத்வஜ ஸுந்தரீதி**
**ஸாகம்பரீதி ஸஸிஸேகர வல்லபேதி**
**ஸ்ருஷ்டிஸ்திதி ப்ரளயகேளிஷு ஸம்ஸ்திதா யா**
**தஸ்யை நமஸ்த்ரிபுவனை கநுரோஸ்தருண்யை** 10

ஆக்க சரஸ்வதியாய் காக்கத் திருமகளாய்

நீக்க சிவன்துணையாய் நின்ற மகாலஷ்மி

பார்த்து அருள்புரிவாய் பக்தன் வணங்குகிறேன்

கோர்த்த கவிமாலை யால்!

**ஸ்ருத்யை நமோஸ்து ஸுபகர்மபலப்ரஸூத்யை**
**ரத்யை நமோஸ்து ரமணீயகுணார்ணவாயை**
**ஸக்த்யை நமோஸ்து ஸதபத்ர நியேதனாயை**
**புஸ்ட்யை நமோஸ்து புருஷோத்தமவல்லபாயை** **11**

தீவினை வேரறுக்கும் தெய்வ மகாசக்தியாய்

வேதத்தின் அர்த்தமாய், கர்மத்தின் ஸித்தியாய்

சீதத்துத் தாமரையில் சேர்விஜய லஷ்மியே!

காதலால் மாலவன் கண்நிறை ஸ்ரீதேவி

ஆயிரம் பண்பிற்கு ஆதாரம் அன்னைநீ

பாயிரம் பாடியும் பார்வையால் யாசித்தும்

பாதத்தைப் பற்றினேன், பால்வண்ண ஸௌந்தரீ

பார்க்கநீ பாராளு வேன்!

**நமோஸ்து நாளீகநிபானனாயை**
**நமோஸ்து துக்தோததி ஜன்மபூம்யை**
**நமோஸ்து ஸோமாம்ருதஸோதராயை**
**நமோஸ்து நாராயணவல்லபாயை** **12**

வைகறைத் தாமரைப் பூநிகிர்த் தூமுகம்

கொய்மலர் வாட்டத்தைக் காணாத கண்களின்

மைநிறத் தேன்குழற் மாதவச் செல்வியே!

மெய்உயிர்த் தத்துவ உள்ளுறை ஞானமே!

வான்கடற் சந்திரன் நல்லமுதின் சோதரி,

பாற்கடற் பள்ளியின் நாயகன் நாயகி!

நாற்கடற் சூழ்ந்த நரகத்தைத் தாண்டியுன்

காற்கடல் சேரவிழைந் தேன்!



**நமோஸ்து ஹேமாம்புஜபீடிகாயை**
**நமோஸ்து பூமண்டல நாயிகாயை**
**நமோஸ்து தேவாதிதயாபராயை**
**நமோஸ்து ஸார்ங்காயுதவல்லபாயை** **13**

மலரைத் தரித்த மலர்க்கரம் போற்றி,

உலகம் புரக்கும் திருமகள் போற்றியே!

தேவர் முதலாய் முனிவர் தமக்குமே,

ஆதி முதலருள் தந்தாய் போற்றி!

திருமா லவனின் கருணையே போற்றி!

திருச்சானூர் வாழ்தே வியே!

**நமோஸ்து தேவ்யை ப்ருகுநந்தனாயை**
**நமோஸ்து விஷ்ணோருரஸி ஸ்திதாயை**
**நமோஸ்து லக்ஷ்ம்யை கமலாலயாயை**
**நமோஸ்து தாமோதரவல்லபாயை** **14**

பிருகு குலத்தில் பிறந்தாய் சரணம்!

கரிய நெடுமா லவனுக் கிணையாய்,

உலகு புரக்குமென் தாயே சரணம்!

அழகு மலரில் அமர்ந்துதா மோதரனின்

மார்பி லொளிர்ந்த மகிமையைப் போற்றினேன்,

சேர்க தனபாக் கியமே!

**நமோஸ்து காந்த்யை கமலேக்ஷணாயை**
**நமோஸ்து பூத்யை புவனப்ரஸூத்யை**
**நமோஸ்து தேவாதிபிரார்ச்சிதாயை**
**நமோஸ்து நந்தாத்மஜவல்லபாயை** 15

குழலோசை கோபாலன் கோதை சரணம்,
ஒளிமுக காந்தி எழிலோய் சரணம்,
அசைவிழித் தாமரை தேவீ சரணம்,
அமுத சகோதரி அம்பா சரணம்!

புவனம் இயக்கும் பூவே சரணம்,
மனதில் சாந்தி அருள்வாய் சரணம்!
மகிமை திருவடி தேவர் வணங்கும்,
மகளே சரணம், சரணம்!

**ஸம்பத்கராணி ஸகவேந்த்ரிய நந்தனானி**
**ஸாம்ராஜ்யதான விபவானி ஸரோருஹாக்ஷி**
**த்வத்வந்தனானி துரிதாஹரணோத்யதானி**
**மாமேவ மாதரநிஸம் கலயத்து மான்யே** 16

தாமரைப் பூவிழி தேவியைப் போற்றுவோம்,
தேவரும் மக்களும் யாவரும் போற்றுவோம்,
மாபெரும் செல்வ மளிப்பவள் மாதா!
புலன்கரை தாண்டி புரியுமெய்ஞ் ஞான

கலங்கரை ஜோதிக் கனலாய் இருப்பாள்!
கலங்க வினைகள் கதியளித் தென்னை
துலங்கு மரியா சனத்தி லமர்த்தி
விளங்கக் குறித்திடு வாள்!



**யத்கடாக்ஷஸ முபாஸனவிதி:**
**ஸேவகஸ்ய ஸகலார்த்த ஸம்பத:**
**ஸந்தனோதி வசனாங்கமானஸை:**
**த்வாம் முராரி ஹ்ருதயேச்வரீம் பஜே** 17

ஹரியின் துணையே! கசிந்தெனை நீயும்
கடைக்கண் பார்வையால் பார்க்க உலகில்,
குறைவிலாச் செல்வம் குவியுமே நாளும்!
கரையும் மனதால் கவிநாக் கதனால்

விரையும் உடலால் தொழுதேன் தினமும்,
அருள்க திருமக ளே!

**ஸரஸிஜநிலயே ஸரோஜஹஸ்தே**
**தவளதமாம் ஸுககந்தமால்ய ஸோபே**
**பகவதி ஹரிவல்லபே மனோக்ஞே**
**த்ரிபுவன பூதகரி ப்ரஸீத மஹ்யம்** 18

தாமரை ஏறிகை தாமரை ஏந்தியே,
தூநிறப் பட்டில் துலங்கும் மகிமையே!
வெண்ணிற மாலை கமழும் மணத்திலே
கண்ணிறை வாக கனிந்தநல் தேவியே!

புண்ணிய மாலின் இதயத் தரசியே,
மன்னருங் காணா நன்னருஞ் செல்வம்
எனதுகை காணும் திருவருள் சற்று
மனதுவைத் தாண்டு விடின்!

**திக்கஸ்திபி: கனககும்ப முகாவஸ்ருஷ்ட**
**ஸ்வர்வாஹினி விமலசாரு ஜலாப்லுதாங்கீம்**
**ப்ராதர்நமாமி ஜகதாம் ஜனனீமசேஷ**
**லோகாதிநாத க்ருஹிணீம் அம்ருதாப்தி புத்ரீம்** 19

ஆழி கொடுத்தவுனை அன்பாலே நீராட்ட

நாழி முகந்துவரும் கங்கைநீர் யானைகள்,

எட்டுத் திசைநீரும் பட்டுத் திருமேனி

தொட்டுக் குளிப்பாட்டத் தூய்மைப் பிறப்பிடமாய்

ஊழி ஜகன்னாதன் உத்தமியாய் வந்தமர்ந்தாய்,

வாழி திருப்பாதங் கள்!

**கமலே கமலாக்ஷவல்லபே த்வம்**
**கருணாபூரதரங்கிதைரபாங்கை:**
**அவலோகய மாம கிஞ்சனானாம்**
**ப்ரதமம் பாத்ரமக்ருத்ரிமம் தயாயா:** 20

மலரிலுறையும் மலரே, மலர்க்கண்

விரிய சுரக்கும் கனிவே, மகிஷி!

கருணை மழைநீ, வறண்ட நிலம்நான்

பொழிய மனம்வை செழிக்கக் கதிர்கள்!

விழியின் கடைக்கண் முதலில் திரும்ப

தகுதியுடைய வறிய நிலைதான்!

நெடிய விழிகள் நிமிடம் படர

கொடிய வறுமை யொழிந்து சகல

நிதியும் நிறைவும் நிழலும் கிடைக்கும்

அருள்க கடாட்ச வரம்!



**தேவி ப்ரஸீத ஜகதீச்வரி லோகமாதா:**
**கல்யாண காத்ரி கமலேக்ஷண ஜீவநாதே**
**தாரித்ரியபீதிஹ்ருதயம் ஷரணாகதம் மாம்**
**ஆலோக்ய ப்ரதிதினம் ஸதயய்ரபாங்கை** 21

சுரங்களளென்னை ஆசீர் வசிக்க! கடைக்கண்

கமலமென்மேல் பார்வை பதிக்க! சரணத்

துகள்கள் வறுமைப் பிணியை விரட்ட!

தினமும் இவன்மேல் கருணை கூட்டி

கவனித் தருள்க அகிலம் புரக்கும்

புவனத் தரசியாம் நீ!

**ஸ்துவந்தி யே ஸ்துதிபி ரமீபி ரன்வஹம்**
**த்ரயீமயீம் த்ரிபுவனமாதரம் ரமாம்**
**குணாதிகா குருதரபாக்யபாகின:**
**பவந்தி தே புவி புதபாவிதாஸயா:** 22

வேதங்கள் மூன்றுக்கும், லோகங்கள் மூன்றுக்கும்

மாதாநீ, உன்னை வணங்கித் துதிக்கின்ற

பேரெல்லாம் பாக்கியவான், மேன்மை குணங்கொண்ட

ஞானவான், இவ்வுலகம் மெச்சுகின்ற தாளாளன்

என்னேஉன் பார்வை மகிமை திருமகளே,

தண்டனிட்டேன் தாயே கதி!